[11th November 1961

SRI T. S. RAMASWAMI : கேரளத்திலும் உத்திரப் பிரதேசத்திலும் ஐ.ஏ.எஸ். போன்றவற்றுக்கு பல்கலைக் கழகத்தின் மூலம் பயிற்சி கொடுக்கிறார்கள். அதுபோன்று நம்முடைய ராஜ்யத்திலும் மெட்ராஸ் யூனிவர்சிடி சம்மதம் கொடுக்கவில்லை என்றால் அண்ணாமலை யூனிவர்சிடி மூலமாகவாவது பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : மெட்ராஸ் யூனிவர்சிடியைக் கேட்டோம். முடியாது என்று கூறிவிட்டார்கள். டைரக்டர் ஆப் ஹரிஜன் வெல்பேர் ஒரு திட்டம் கொடுத்திருக்கிறார்கள். திரு மலையப்பன், ஐ.ஏ.எஸ்., ப்ரொபசர் கே. சுப்பிரமணியம், சுவாமி சித்பவானந்தா ஆகியவர்கள் கொண்ட ஒரு குழு அமைத்து எந்த மாதிரி ட்ரெயினிங் கொடுப்பது என்பது பரிசீலனையில் இருக்கிறது. இதர யூனிவர்சிடிகளைக் கேட்கவில்லை. அதுபற்றி ஆலோசிக்கப்படும்.

SRI P. G. MANICKAM : இத்திட்டத்தை நடப்பு வருஷத்திலேயே ஆரம்பிக்க சர்க்கார் ஏதாவது பரிசீலனை செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நம் மாகாணத்தைப் பொறுத்த வரையில் பதில் சொன்னேன். ஹரிஜன மாணவர்களுக்காக ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். ஆகியவற்றுக்கு ட்ரெயினிங் கொடுப்பதற்கும் பரிட்சார்த்தமாக அலகாபாத்தில் பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தென் பகுதியில் ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டிருக்கிறோம். அதுபற்றி மத்திய அரசாங்கம் முடிவு செய்யும்.

*Major rivers in India (linking)*

* 1995 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்திய நாட்டிலுள்ள எல்லா பெரிய நதிகளையும் ஒன்றாக இணைக்கவும், அதற்கான கால்வாய்களை வெட்டவும் முன்பு திட்டமிடப்பட்டிருந்ததை இந்த அரசாங்கம் அறியுமா ?

(இ) இந்தத் திட்டத்தை இப்போது பரிசீலிக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI P. KAKKAN : (அ) No, Sir.

(இ) No, Sir.

*Gypsies Colony (Kammapuram)*

* 1996 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. SELVARAJ): கனம் பொது மராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விருத்தாசலம் தாலுகாவில் கம்மாபுரம் அருகே அமைந்துள்ள நரிக்குறவர் காலனி எந்த ஆண்டு துவக்கப்பட்டது ?